கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

மனைப் பொருளியல் I
Home Economics I

28 T I

இரண்டு மணித்தியாலம்
*Two hours*

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை எழுதுக.**
* கணிப்பானைப் பயன்படுத்தக் **கூடாது.**
* விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசிக்க.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** வீடு ஒன்றை அமைப்பதற்கு சமர்ப்பிக்கப்பட்ட நீலப்பிரதிக்கு அனுமதி கிடைக்கவில்லை. இதற்கு காரணமாக அமையக்கூடியது

(1) சுவரின் உயரம் 9 1/2 அடி ஆக இருத்தல்
(2) அறையின் பரப்பில் 1/15 பகுதி கதவுக்காக வைக்கப்பட்டிருத்தல்
(3) அறையின் சுவர் எல்லைச் சுவராக அமைந்திருத்தல்
(4) பிரதான படுக்கை அறையின் பரப்பு 100 சதுர அடி ஆகக் காணப்படல்
(5) அறையின் பரப்பில் 1/7 பகுதி யன்னல்களுக்கு ஒதுக்கப்பட்டிருத்தல்

**2.** வீடு ஒன்றில் சமையல் அறையைத் திட்டமிடுதல், ஒழுங்கமைத்தல் ஆகியன தொடர்பான **தவறான** கூற்று பின்வருவனவற்றுள் எது?

(1) சமையலறைக்கு இரண்டு கதவுகள் காணப்பட்டன.
(2) வாசற்கதவின் இடதுபக்கமாக குளிர்சாதனப்பெட்டி வைக்கப்பட்டுள்ளது.
(3) கழுவுதொட்டியின் உட்புற மேற்பரப்பு பளிங்கு ஓடுகளால் (tiles) ஆனது.
(4) பாவின் நடுப்பகுதியில் மின்குமிழ் பொருத்தப்பட்டுள்ளது.
(5) கழுவுத்தொட்டியின் கீழ்ப்பகுதியில் வாயு உருளை (கேஸ் சிலிண்டர்) வைக்கப்பட்டுள்ளது.

**3.** ஒரு வரவேற்பறையை ஒழுங்கமைத்தலின்போதும் அலங்கரித்தலின்போதும் எடுக்கப்பட்ட படிமுறைகள் பின்வரும் வரிப்படத்தில் காட்டப்பட்டுள்ளன.




இதில் சந்தம் (rhythm) காட்டப்படுவது

(1) **A** இல்
(2) **C** இல்
(3) **A** இலும் **E** இலும்
(4) **B** இலும் **D** இலும்
(5) **D** இலும் **E** இலும்

[பக். 2 ஐப் பார்க்க

**4.** நிறங்களின் குணவியல்புகளில் ஒன்றான செறிவு என்பது, நிறத்தின்
(1) இளம், கடும் தன்மைகள் ஆகும்.
(2) வெப்பமான, குளிர்மையான தன்மைகள் ஆகும்.
(3) பிரகாசமான, இருண்ட தன்மைகள் ஆகும்.
(4) அமைதியான, ஆரவாரமான தன்மைகள் ஆகும்.
(5) முன்னடையும், பின்னடையும் தன்மைகள் ஆகும்.

**5.** எதிர்நிற இசைவுக்கு உதாரணமாக அமைவது
(1) மஞ்சட் செம்மஞ்சள், நீல ஊதா
(2) நீலப் பச்சை, சிவப்பு ஊதா
(3) மஞ்சட் பச்சை, நீல ஊதா
(4) மஞ்சட் செம்மஞ்சள், சிவப்பு ஊதா
(5) சிவப்பு செம்மஞ்சள், மஞ்சட் பச்சை

**6.** வீட்டு வளங்கள் பிரதானமாக வகைப்படுத்தப்படுவது
(1) பௌதிகம், பௌதிகம் அல்லாத வளங்கள் என
(2) மனித, பௌதிக வளங்கள் என
(3) மனித, மனித அல்லாத (மனிதனில்) வளங்கள் என
(4) பௌதிக, மனித அல்லாத வளங்கள் என
(5) மனித, பௌதிக அல்லாத வளங்கள் என

**7.** மின்னழுத்தியின் ஈருலோகச் சட்டகம்
(1) தடித்த துணிகளை அழுத்துவதைச் சுலபமாக்கும்.
(2) மின்னழுத்தியின் வெப்பத்தினைக் கட்டுப்படுத்தும்.
(3) மின்னழுத்தியின் வெப்பக்கடத்தலின் வினைத்திறனை அதிகரிக்கும்.
(4) மின்னோட்டம் தடைப்பட்ட வேளையிலும் வெப்பத்தை வழங்கும்.
(5) மின்னழுத்தியில் புவிப்பொசிவுக்காகப் பயன்படுத்தப்படும்.

**8.** குறைந்த உயிரியல் பெறுமானமுடைய புரதம்
(1) இலாஸ்ரின் (2) கொலாஜின் (3) ஜெலற்றீன் (4) அல்புமின் (5) மயோசின்

**9.** கொழுப்புகள் ஐதரசனேற்றமடைதல் என்ற செயன்முறையின் மூலம்
(1) அத்தியாவசிய கொழுப்பமிலங்களின் அளவு அதிகரிக்கும்.
(2) இரட்டைப் பிணைப்புக்களின் எண்ணிக்கை அதிகரிக்கும்.
(3) பாண்டல் மணம் உருவாகும்.
(4) திண்மக் கொழுப்பு திரவக் கொழுப்பாக மாற்றமடையும்.
(5) நிரம்பாக் கொழுப்புகள் நிரம்பிய கொழுப்புகளாக மாற்றமடையும்.

**10.** மனித உடலில் காணப்படும் கொழுப்பு சதவீதமானது
(1) பெண்பிள்ளைகளை விட ஆண்பிள்ளைகளில் அதிகமாகும்.
(2) வளர்ந்தோராகும்போது (Adulthood) படிப்படியாகக் குறைவடையும்.
(3) ஆண்களைவிடப் பெண்களில் அதிகமாகும்.
(4) 'ஒவ்வாமை' உடைய நபர்களில் குறைவு ஆகும்.
(5) குழந்தைப் பருவத்தில் அதிகமாகும்.

**11.** உடலில் கொலஸ்ரோலின் தொழிற்பாடு **அல்லாதது** பின்வருவனவற்றில் எது?
(1) நொதியங்களின் தொகுப்பு
(2) ஓமோன்களின் தொகுப்பு
(3) நரம்புக்கலங்களின் பாதுகாப்பு
(4) பித்தச் சாற்றின் உற்பத்தி
(5) விற்றமின் D இன் தொகுப்பு

**12.** உடலில் கல்சியத்தினால் ஆற்றப்படும் தொழிற்பாடானது
(1) நீர்ச் சமநிலையைக் கட்டுப்படுத்தல்
(2) ஒட்சிசனைக் கொண்டு செல்லல்
(3) நீர்ப்பீடனம் வழங்கல்
(4) குருதியை உறையச் செய்தல்
(5) தசை இழையங்களை உருவாக்குதல்

**13.** விற்றமின் B கூட்டத்தில், விற்றமின் $B_6$ என இனங்காணப்படுவது
(1) பயோற்றின் (2) போலிக்கமிலம் (3) தயமின் (4) நயாசின் (5) பிரிடொக்சின்

**14.** அயடின் குறைபாட்டினால் **ஏற்படாத** நிலை
(1) உதடுவெடிப்பு
(2) மந்த புத்தி (மொங்கோலிசம்)
(3) குறல்நிலை
(4) கண்டக்கழலை
(5) உள வளர்ச்சிக்குறைபாடு

**15.** உடல் வளர்ச்சி மற்றும் நடத்துகை, தோலை ஆரோக்கியமாகப் பேணுதல், சீதமென்சவ்வினைப் பேணுதல் போன்ற தொழிற்பாடுகளுடன் தொடர்புபடும் விற்றமின்
(1) விற்றமின் A (2) விற்றமின் $B_1$ (3) விற்றமின் $B_2$ (4) விற்றமின் C (5) விற்றமின் D

[பக். 3 ஐப் பார்க்க

**16.** மாணவர் ஒருவரினால் பால், சோயாஅவரை ஆகியன பற்றி எழுதப்பட்ட குறிப்பில் பின்வரும் விடயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.
A - சோயாஅவரை நிறை புரதத்தைக் கொண்டுள்ளது.
B - பாலுணவு காபோவைதரேற்றைக் கொண்டுள்ளது.
C - ரெம்ப் (Tempeh), ரோபு (Tofu) ஆகியன இரு சோயா உற்பத்திகளாகும்.
D - பாலில் இரும்பு, விற்றமின் C ஆகியன மிகக் குறைவாகக் காணப்படும்.
E - சோயாஅவரை மிகக் குறைந்தளவு கொழுப்பினையும் விற்றமின் A யையும் கொண்டுள்ளது.
மேற்கூறப்பட்டவற்றுள் சரியானவை,
(1) A யும் E யும்
(2) A யும் B யும் C யும்
(3) B யும் C யும் D யும்
(4) C யும் E யும்
(5) C யும் D யும் E யும்

**17.** விற்றமின் C குறைபாட்டின் அறிகுறியாவது
(1) கடைவாய்ப்புண்
(2) புண் ஆறுவதில் தாமதம்
(3) வயிற்றோட்டம்
(4) மங்கலான பார்வை
(5) பாதத்தில் விறைப்பு

**18.** பின்வருவனவற்றுள் எக்கூற்று விற்றமின் C, E ஆகியவற்றுடன் தொடர்புடையது?
(1) வெப்பத்துக்கு நிலையற்றது.
(2) ஒட்சியெதிரியாகத் தொழிற்படும்.
(3) கொழுப்பில் கரையும்.
(4) விலங்குணவில் அதிகம் காணப்படும்.
(5) உடலில் தொகுக்கப்படும்.

**19.** சிபாரிசு செய்யப்பட்ட நாளாந்த உணவுத் தேவை (2007) அட்டவணையில் தேவைப்பாடு மில்லிகிராம்களில் காட்டப்படும் இரு போசணைப் பொருள்கள்
(1) பயோட்டின், நயாசின்
(2) விற்றமின் C, போலிக்கமிலம்
(3) கல்சியம், இரும்பு
(4) மக்னீசியம், விற்றமின் A
(5) தயமின், விற்றமின் $B_{12}$

**20.** கரோட்டினொயிட் வகையைச் சேர்ந்த லைக்கோபின் அடங்கும் உணவு மூலமானது
(1) பூசணி
(2) கரட்
(3) பப்பாசி
(4) தக்காளி
(5) பீற்றூட்

**21.** உணவும் போசணையும் பற்றி மாணவர்களால் முன்வைக்கப்பட்ட பின்வரும் கூற்றுகளுள் சரியான கூற்று எது?
(1) உடலில் கல்சியம் அகத்துறிஞ்சலை விரைவுபடுத்த ஒட்சாலிக் அமிலம் உதவுகின்றது.
(2) கொழுப்பின் ஆக்கக் கூறில் காணப்படும் ஐதரசனுக்கும், ஒட்சிசனுக்கும் உள்ள விகிதம் 2:1 ஆகும்.
(3) போலிக்கமிலம், நயாசின் ஆகியன குறைவதனால் குருதிச்சோகை ஏற்படும்.
(4) உலர்வெப்பத்தில் சமையல் செய்யும்போது புரதநார்கள் கடினமடைகின்றன.
(5) சுக்குரோசுக் கரைசலுக்கு பீலிங்கின் கரைசல் A, B ஆகியவற்றைச் சேர்த்து சூடாக்கும்போது சிவப்பு நிற வீழ்படிவு பெறப்படுகின்றது.

**22.** விற்றமின் $B_{12}$ அதிகமாகவுள்ள இரண்டு உணவு மூலங்கள்,
(1) சோறு, பால்
(2) வல்லாரை, கோதுமை
(3) மீன், இறைச்சி
(4) எலுமிச்சம்பழம், முட்டை
(5) ஈரல், சோயாஅவரை

**23.** உணவிலுள்ள புரதத்தின் மீது செயற்படும் மூன்று நொதியங்கள்
(1) இலக்ரோஸ், பெப்சின், ரெனின்
(2) சுக்குரேசு, அமைலேசு, இலிப்பேசு
(3) ரெனின், இலிப்பேசு, அமைலேசு
(4) மோல்ற்ரேஸ், திரிப்சின், பெப்ரிடேசு
(5) பெப்ரிடேசு, திரிப்சின், பெப்சின்

**24.** காபோவைதரேற்று அனுசேபத்தின்போது கிளைக்கோபகுப்பின் இறுதியில் குளுக்கோசு மாற்றப்படுவது
(1) பிரக்றோசு ஆக
(2) அசற்றிக் அமிலம் ஆக
(3) பைருபிக்கமிலம் ஆக
(4) கிளைக்கோஜன் ஆக
(5) அசற்றைல் துணை நொதியம் A ஆக

**25.** பின்வரும் எவ்விரண்டு பேஸ்டரி வகைகளைத் தயாரிக்கும்போது மா, கொழுப்பு ஆகிய இரண்டையும் விசுக்கோத்து தூள் வடிவத்துக்கு வரும்வரை கலத்தல் இடம்பெறும்?
(1) இக்லெயாஸ், பேஸ்ரி பாஸ்கற்
(2) கிறீம் பன்ஸ், பற்றீஸ்
(3) பற்றீஸ், இக்கிலெயாஸ்
(4) பற்றீஸ், பேஸ்ரி பாஸ்கற்
(5) பேஸ்ரி பாஸ்கற், கிறீம் பன்ஸ்

**26.** சைனீஸ்ரோல்ஸ் பற்றி மாணவர்களால் எழுதப்பட்ட குறிப்பிலிருந்து எடுக்கப்பட்ட சில விடயங்கள் பின்வருமாறு:
A - சமையலின்போது கடத்தல், மேற்காவுகை என்பன மூலம் வெப்பம் இடமாற்றப்படும்.
B - மாக்கலவையும், விசுகோத்து தூளும் கவசமாகப் பயன்படுகின்றன.
C - பேஸ்டரிக் கூட்டத்தைச் சேர்ந்த ஓர் உணவு ஆகும்.
D - சமையலின்போது ஆழமற்ற மற்றும் ஆழமான எண்ணெயில் பொரித்தல் நடைபெறுகிறது.
E - மினுமினுப்பாக்கியாக முட்டை மஞ்சட் கரு பயன்படுகிறது.
இவற்றுள் சரியானவை,
(1) A யும் B யும் C யும்
(2) A யும் B யும் D யும்
(3) A யும் C யும் D யும்
(4) B யும் C யும் D யும்
(5) C யும் D யும் E யும்

[பக். 4 ஐப் பார்க்க

3779

27. ஒருவருடைய உயரம், நிறை ஆகியன முறையே 155 cm உம் 55 kg உம் ஆகும். அவருடைய உடற்றிணிவுச் சுட்டிப் பெறுமானம்
(1) 18.9 (2) 20.3 (3) 22.9 (4) 26.1 (5) 30.2

28. பின்வருவனவற்றுள் நார் உணவுப்பொருட்கள் தொடர்பாக **பொருத்தமற்ற** கூற்று எது?
(1) உடலினுள் இரும்பு அகத்துறிஞ்சலை அதிகரிக்கும்.
(2) உணவை உள்ளெடுத்த பின் நிறைவான உணர்வை ஏற்படுத்தும்.
(3) சிறுகுடலில் மலத்தின் மூலம் அகத்துறிஞ்சப்படும் நீரின் அளவை அதிகரிக்கும்.
(4) உடலினுள் குளுக்கோஸ் அகத்துறிஞ்சலுக்கு தடங்கலை ஏற்படுத்தும்.
(5) சிறுகுடலில் சுற்றுச்சுருங்கல் அசைவை விரைவுபடுத்தும்.

29. தொற்றா நோய்களுக்கான உணவுக் கட்டுப்பாட்டை மேற்கொள்ளும்போது கருத்திற்கொள்ள வேண்டிய சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.
A - உணவில் ஆழ்கடல் மீன் சேர்த்துக்கொள்வதற்கு சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.
B - பொரிப்பதற்கு திரும்பத் திரும்ப பொரித்த எண்ணெய் பொருத்தமற்றது.
C - வெதுப்பக உற்பத்திகளான பேஸ்டரிகள், பீஸா என்பன பொருத்தமற்றவை.
D - குறைந்தளவு உப்பை உள்ளெடுப்பது உகந்தது.
இவ் அனைத்து விடயங்களும் மிகப் பொருந்துவது,
(1) அதி உடற்கொழுமைக்கு (2) நீரிழிவுக்கு (3) இரைப்பை அழற்சிக்கு
(4) மிதமிஞ்சிய உடல் நிறைக்கு (5) இதயநோய்களுக்கு

30. ஒலேயிக்கமிலமானது
(1) ஒமேகா - 6 - கொழுப்பமிலம் ஆகும். (2) ஒமேகா - 3 - கொழுப்பமிலம் ஆகும்.
(3) நிரம்பிய கொழுப்பமிலம் ஆகும். (4) தனி நிரம்பாத கொழுப்பமிலம் ஆகும்.
(5) பல் நிரம்பாத கொழுப்பமிலம் ஆகும்.

31. இலங்கையில் திரிபோஷா நிகழ்ச்சித்திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ள இரு இலக்குக் குழுக்கள்
(1) கர்ப்பிணித் தாய்மார், பின்பிள்ளைப்பருவத்தினர்
(2) பாலூட்டும் தாய்மார்கள், வயதுவந்த யுவதிகள்
(3) நீண்டகால நோயாளிகள், கர்ப்பிணித் தாய்மார்கள்
(4) குழந்தைகள், முதியோர்கள்
(5) முன்பிள்ளைப்பருவத்தினர், பாலூட்டும் தாய்மார்கள்

32. பின்வருவன சில வகை நுண்ணங்கி இனங்கள் ஆகும்.
A - ஈஸ்கெரிசியா கோலி
B - ஸ்ரெப்ரோகொக்கஸ் லக்ரிஸ்
C - குளோஸ்ரிடியம் பொட்டுலினம்
D - அசெற்ரோபக்ரர் அசெற்றை
E - ஹெலிகோபக்ரர் பைலோறா
இவற்றுள் உணவு பதனிடலில் பயன்படுத்தப்படுகின்ற நுண்ணங்கிகள்,
(1) A, B ஆகியன. (2) B, D ஆகியன. (3) B, C, D ஆகியன.
(4) C, D, E ஆகியன. (5) D, E ஆகியன.

33. கருவாடு தயாரிக்கும்போது
(1) உயர் வெப்பம் பயன்படுத்தப்படும். (2) நீர் முற்றாக நீக்கப்படும்.
(3) போசணை இழப்பு அதிகம். (4) புறப்பிரசாரணம் நடைபெறும்.
(5) ஆரம்ப உணவில் உள்ள தரப் பண்புகள் நிலைநாட்டப்படும்.

34. உணவு நற்காப்பில் பயன்படுத்தப்படும் சேதன உப்பானது
(1) சோடியம் நைத்திரைற்று (2) சோடியம் பைசல்பைற்று (3) சோடியம் குளோரைட்டு
(4) சோடியம் மெற்றாபைசல்பைற்று (5) சோடியம் பென்சோவேற்று

35. குழந்தை விருத்தி பற்றி மாணவர்களால் முன்வைக்கப்பட்ட சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன. இவற்றுள் சரியானது எது?
(1) முதிர்ந்த சூல் இரண்டு விந்துகளால் கருக்கட்டப்படுவதால் ஒத்த இரட்டையர் உருவாவர்.
(2) போலியோ வக்சீனின் 1 வது தடவை வழங்கப்படுவது குழந்தையின் வயது 2 மாதம் பூர்த்தியடைந்த பின்னராகும்.
(3) குழந்தைப்பருவத்தில் இயக்க விருத்திக்கு பயிற்சி அவசியம்.
(4) முன்பிள்ளைப்பருவத்தில் இடக்கைப் பழக்கம் பிரச்சினைக்குரிய நடத்தையாகும்.
(5) 14 வயதுக்குக் குறைந்த சிறுவர்களை வீட்டு வேலைக்கமர்த்துவது துர்செயலாகும்.

36. பின்வருவனவற்றுள் முற்பிரசவ விருத்தி தொடர்பான சரியான கூற்று
(1) சூல் கொள்ளலின் பின்னர் இரண்டு வாரங்களுக்குள் கருக்கட்டல் நிகழக்கூடும்.
(2) சூலகங்களினாலும் சூல்வித்தகத்தினாலும் பெண் இனப்பெருக்க ஓமோன்கள் சுரக்கப்படும்.
(3) தாய் நீரிழிவு நோயினால் அவதியுறுகையில் முதிர்மூலவுருவின் நிறைகுறையும்.
(4) 4 மாதங்களிலிருந்து பிறக்கும் வரையுள்ள காலப்பகுதி முதிர்மூலவுருப் பருவம் எனப்படுகிறது.
(5) கர்ப்ப காலத்தில் தாயின் நிறை அதிகரிப்பு 6 - 8 kg வரை என எதிர்பார்க்கப்படுகிறது.

[பக். 5 ஐப் பார்க்க

**37.** தாய்ப்பால் உற்பத்தியையும் சுரத்தலையும் தூண்டும் ஓமோன்கள்,
(1) ஈஸ்ரஜன், ஒக்சிரோசின் (2) புரோலக்ரின், புரோஜெஸ்ரரோன்
(3) புரோலக்ரின், ஈஸ்ரஜன் (4) ஒக்சிரோசின், புரோலக்ரின்
(5) புரோஜெஸ்ரரோன், ஒக்சிரோசின்

**38.** தேசிய நீர்ப்பீடன நிகழ்ச்சித்திட்டத்தின் கீழ் குழந்தையொன்றுக்கு 6 மாதங்கள் வரை வழங்கப்படும் வக்சீன்களால் தடுக்கப்படும் இரண்டு நோய்கள்,
(1) ஈர்ப்புவலி, கூகைக்கட்டு (2) போலியோ, ருபெல்லா
(3) ருபெல்லா, சின்னமுத்து (4) ஹெப்பரைட்டிஸ் B, கூகைக்கட்டு
(5) ஈர்ப்புவலி, குக்கல்

**39.** பின்பிள்ளைப்பருவ பிள்ளை பற்றிய **தவறான** கூற்று
(1) ஏனையோருடன் சினேகபூர்வமாக நடந்துகொள்ளல்
(2) பல்வேறுபட்ட விடயங்கள் தொடர்பாக ஆர்வம் காட்டுதல்
(3) கோபாவேசத்தை உடலியல் ரீதியாக வெளிப்படுத்துதல்
(4) ஏனையோர் மீது பொறாமை கொள்ளல்
(5) எப்போதும் சுறுசுறுப்புடன் இருத்தல்

**40.** பொருத்தமான படங்களை இணைத்தல் செயற்பாடு மூலம் முன்பிள்ளைப்பருவத்தினரின்
(1) ஆக்கத்திறன் விருத்திசெய்யப்படும். (2) எண்ணங்களை வெளிப்படுத்துவதற்கு சந்தர்ப்பங்களை வழங்கும்.
(3) கண் - கை இணைப்பு மேம்படுத்தப்படும். (4) மொழி விருத்தி மேம்படுத்தப்படும்.
(5) வரைதலில் ஆர்வத்தை ஏற்படுத்தும்.

**41.** குழந்தையின் மொத்த இயக்க (பெருந் தசை) விருத்தியில் உதவும் ஒரு செயற்பாடு
(1) போத்தலுக்கு நீர் நிரப்புதல்
(2) நடனமாடல்
(3) விளையாட்டுப் பொருளொன்றை உருவாக்குதல்
(4) செயற்கை களிமண்ணினால் வனைதல் / உருவமைத்தல்
(5) தரப்படும் உருவினுள் கடதாசித் துண்டுகளை ஒட்டுதல்

**42.** பின்வருவனவற்றுள் குழந்தை ஒன்றின் மனவெழுச்சி விருத்தியில் தாக்கம் செலுத்தும் காரணி **அல்லாதது** எது?
(1) பரம்பரை (2) பால்நிலை
(3) ஓமோன்கள் (4) ஏற்றுக்கொள்ளல்
(5) அடிக்கடி நோய்வாய்ப்படுதல்

**43.** விஸ்கோஸ் ரேயோன் நார்கள் பிரதானமாகக் கொண்டிருப்பது
(1) கெரட்டின் (2) செலுலோசு (3) செரிசின் (4) லிக்னின் (5) லிவிலோசு

**44.**

A B

மேலே தரப்பட்ட வரிப்படங்கள் A யும் B யும் முறையே காட்டுவன
(1) நூல் இழுத்து சோம் தையல், ஈயுருத் தையல்
(2) மீன்முள்ளுத் தையல், இறகுத் தையல்
(3) ஈயுருத் தையல், மீன்முள்ளுத் தையல்
(4) நூல் இழுத்து சோம் தையல், இறகுத் தையல்
(5) மீன்முள்ளுத் தையல், நூல் இழுத்து சோம் தையல்

**45.** தையலில் நுட்பங்களைப் பிரயோகிக்கும் இரண்டு சந்தர்ப்பங்கள்
(1) சேட்டின் திறப்பைத் தைத்துப் பூர்த்தியாக்கும்போதும் ஆடையின் விளிம்பைத் தைக்கும்போதும்
(2) சேலை ரவிக்கைக்கான கை அடிப்பகுதியைத் தைக்கும்போதும் அதன் கழுத்தைத் தைக்கும்போதும்
(3) சேட்டின் உருவொடு பொருந்து துண்டைப் பொருத்தும்போதும் சேலை ரவிக்கையின் கைக் கரையைத் தைக்கும்போதும்
(4) சேட்டின் கைக் கரையைத் தைக்கும்போதும் அதன் பொக்கட்டைப் பொருத்தும்போதும்
(5) சேலை ரவிக்கைக்கான கழுத்தைத் தைக்கும்போதும் சேட்டின் திறப்பை பூர்த்தியாக்கும்போதும்

[பக். 6 ஐப் பார்க்க

**46.** பின்வருவனவற்றுள் சரியான கூற்று எது?
(1) பூச்சிகளாலும் அந்துகளாலும் நைலோன் துணி சேதப்படுத்தப்படுகிறது.
(2) சரிவுக்கோட்டுத் துண்டு பிடித்து கழுத்தைத் தைத்தல் உருவ முகப்புத்துண்டு பிடித்தல் எனப்படும்.
(3) ஆடைகளைத் தைப்பதற்கு முன்னர் எல்லாத் துணிகளுக்கும் முன்னாயத்தம் செய்யப்படுதல் வேண்டும்.
(4) வாயுவேற்றல் (Gassing) துணிகளின் மேற்பரப்பை ஒப்பமாக்கும்.
(5) உலர்சலவையில் ஸ்ரெனஸ் குளோரைட்டும் காபன் ரெற்றாகுளோரைட்டும் கருவிகளாகப் பயன்படுத்தப்படுகின்றன.

**47.** ஆடைகளில் காணப்படும் கறைகளை நீக்குவதற்குப் பயன்படுத்தப்படும் கரைப்பானும் வெளிற்றியும் முறையே,
(1) வினாகிரி, ஜவல் நீர்
(2) ஐதரசன் பேரொக்சைட்டு, மண்ணெண்ணெய்
(3) ஜவல் நீர், தேசிப்பழச்சாறு
(4) வெண்கட்டி, ஐதரசன் பேரொட்சைட்டு
(5) வினாகிரி, மெதனோல்சேர் மதுசாரம்

**48.** ஒரு மாணவனால் எழுதப்பட்ட குறிப்பொன்றிலிருந்து முன்வைக்கப்பட்ட சில கூற்றுக்கள் வருமாறு,
A - சேலைக்கான ரவிக்கைத் தைக்கும்போது, பிற்பக்க முற்பக்க கழுத்துப் பகுதிகளைத் தைத்த பின்னர் தோள்மூட்டைப் பொருத்த வேண்டும்.
B - பாவு விலா நெசவில் நீளப்பாடாக தடிப்புக்கூடிய நூலும் (பாவு நூலும்) குறுக்காக மெல்லிய நூலும் (நிரப்பு நூலும்) பயன்படுத்தப்படுகின்றன.
C - வேல் மடிப்புகளைத் தைக்கும்போது அடியிலிருந்து மேல்நோக்கித் தைக்கப்பட வேண்டும்.
D - சேட்டின் திறப்பினை இணைப்பதற்கு நிலைக்குத்தான தெறியோட்டைகள் பயன்படுத்தப்படுகின்றன.
E - அலங்காரத் தையலான அப்ளிக் வேலைப்பாடு செய்யும்போது அதன் விளிம்பினை நேர்த்தியாக்குவதற்கு கம்பளித் தையலை மாத்திரமே பயன்படுத்த வேண்டும்.
இவற்றுள் சரியானவை
(1) A, B
(2) A, E
(3) B, C
(4) C, D
(5) D, E

**49.** புடவைத் தொழில்நுட்பம் பற்றி மாணவர்களால் தரப்பட்ட சில கூற்றுக்கள் வருமாறு
A - பட்டு நார்களிலிருந்து காபனேற்றம் (கரியாக்கல்) ஊடாக அழுக்குத் துகள்கள் அகற்றப்படுகின்றன.
B - துணியின் பாவுவிளிம்பு வழியே வெட்டப்பட்ட பட்டி, விளிம்பு மூடித்தைத்தலுக்கு மிகவும் உகந்ததாகும்.
C - துணிகளுக்கு இரசாயன முறை மூலமும் பொறிமுறை முறை மூலமும் முறுக்கிடல் செய்யப்படுகின்றது.
D - துணிகளுக்கு இடப்படும் சாயங்களை உறிஞ்சுவதற்கு சாயமேற்றிகள் பயன்படுகின்றன.
E - சலவைச் சவர்க்காரம் குறைந்தளவு காரத்தினைக் கொண்டுள்ளது.
இவற்றுள் சரியான கூற்றுகள்,
(1) A, B ஆகியன
(2) A, C ஆகியன
(3) A, B, E ஆகியன
(4) C, D ஆகியன
(5) C, D, E ஆகியன

**50.** பின்வரும் நார்களில் எந்த நார் வகையை எரிக்கும்போது கடதாசி எரியும் மணத்தைத் தரும்?
(1) பருத்தி நார்கள், பட்டு நார்கள்
(2) பட்டு நார்கள், ரேயோன் நார்கள்
(3) இலினன் நார்கள், நைலோன் நார்கள்
(4) நைலோன் நார்கள், பட்டு நார்கள்
(5) இலினன் நார்கள், ரேயோன் நார்கள்

* * *

AL/2016/28/T-II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

ගෘහ ආර්ථික විද්‍යාව II
மனைப் பொருளியல் II
Home Economics II

28 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள்:**

* பகுதி **I** இல் **1** ஆம் வினா உட்பட **மூன்று** வினாக்களுக்கும் பகுதி **II** இல் **5** ஆம் வினா உட்பட **நான்கு** வினாக்களுக்கும் விடை எழுதுக.

## பகுதி I

(**1** ஆம் வினாவும் வேறு **இரண்டு** வினாக்களும் உட்பட **மூன்று** வினாக்களுக்கு விடை எழுதுக.)

**1.** கிராமப்புறச் சூழலில் விஸ்தாரமான நிலப்பரப்பில் அமைந்துள்ள ஒரு வீட்டின் தளத்திட்டம் கீழே தரப்பட்டுள்ளது. இத்தளத்திட்டத்தில் காட்டப்படும் வீட்டில் ஆரம்பப் பாடசாலை செல்லும் வயதிலுள்ள இரு ஆண்பிள்ளைகளும் ஒரு பெண்பிள்ளையும் உள்ளடங்கலாக ஐந்து அங்கத்தவர்களைக் கொண்ட ஒரு குடும்பம் வசிக்கின்றது. சமீபத்தில் அவர்களுக்கு நீர், மின்சார வசதிகள் கிடைத்தமையினால் பெற்றோர்கள் வீட்டைப் புதுப்பிப்பதற்கு உத்தேசித்துள்ளனர்.




A - விறாந்தையும் வரவேற்பறையும்
B - சாப்பாட்டு அறை
C - சமையலறை
D - படுக்கையறை
E - படுக்கையறை
F - நடைபாதை
G - மலசலகூடம்

(i) இக்குடும்பத்தின் தேவைகளைக் கருத்திற் கொண்டு மிக சொகுசான வாழ்க்கையை வாழக்கூடிய வகையில் தளத்திட்டத்தில் எவ்வாறான **இரண்டு** மாற்றங்களைச் செய்யலாம் என விளக்குக.

(ii) தரப்பட்டுள்ள தளத்திட்டத்தில் 'D' இல் தளபாடங்கள் இடப்படும் விதத்தை ஒரு வரிப்படத்தின் உதவியுடன் காட்டுக.

(iii) இவ்வீட்டில்,
*(a)* வரவேற்பறையின் ஒரு மூலையில்
*(b)* சாப்பாட்டு மேசையின் மத்தியில்
மலர்களை ஒழுங்கமைக்கும்போது வலியுறுத்தப்பட வேண்டிய விடயங்கள் எவை?

(iv) வீட்டின் ஒரு படுக்கை அறைக்கான திரைச்சீலையை அலங்கரிப்பதற்காக அப்ளிக் வேலைப்பாடு செய்வதற்குப் பொருத்தமான காட்டுருவை வரைக. அதற்குப் பயன்படுத்தப்படும் நிறத்திட்டத்தைத் தருக.

(v) இத் திரைச்சீலைகளின் விளிம்புகளுக்குப் பரவற் சுருக்குகள் இணைத்து நேர்த்தியாக்கும்போது பின்பற்றப்பட வேண்டிய படிமுறைகளை விளக்குக.

[பக். 2 ஐப் பார்க்க

2. (i) புடவை உற்பத்தியில் பருத்தி நார்களின் தயாரிப்புச் செயன்முறையை விளக்குக.

(ii) (a) நீரில்

- நிலையில் வன்மை
- நிலையான வன்மை

ஏற்படுவதற்கான காரணங்களைத் தருக.

(b) நீரின் நிலையில் வன்மை, நிலையான வன்மை என்பவற்றை எவ்வாறு நீக்கலாம் என விவரிக்குக.

(iii) புடவைகளைத் தூய்தாக்கும்போது

(a) சவர்க்காரம்

(b) மேற்பரப்பு இழுவிசை

(c) உராய்வு

என்பன பங்களிப்புச் செய்யும் விதத்தை விளக்குக.

(iv) (a) மினுக்குதல் / உருளையில் அழுத்துதல் மூலம் துணிகளில் / நார்களில் மேம்படுத்தப்படும் பண்புகள் **இரண்டு** எழுதுக.

(b) மினுக்குதல் / உருளையில் அழுத்துதல் செயன்முறையை விபரிக்குக.

3. (i) புதிதாக திருமணமான தம்பதியினர் தாங்கள் வசிப்பதற்காக ஒரு படுக்கையறையைக் கொண்ட இணைந்த வீட்டினைத் (அனெக்ஸ்) தெரிவு செய்துள்ளனர். அவர்கள் அவ்வீட்டுக்குத் தளபாடங்களைத் தெரிவு செய்யும்போது கருத்தில் கொள்ள வேண்டிய விடயங்களை விளக்குக.

(ii) ஒத்த நிற இசைவுத் திட்டத்தைப் பயன்படுத்தி ஒரு குழந்தையின் அறையை எவ்வாறு அலங்கரிக்கலாமென விபரிக்குக.

(iii) (a) வீட்டு மின்சுற்றின் பாகங்களைப் பெயரிடுக. அவை ஒவ்வொன்றினதும் தொழிற்பாடுகளை எழுதுக.

(b) மின் சாதனங்களைப் பயன்படுத்தும்போது பின்பற்ற வேண்டிய பாதுகாப்பு நடவடிக்கைகளை விபரிக்குக.

4. (i) கழிவுப்பொருள்களை முகாமை செய்தல் தற்போது ஒரு பிரச்சனையாக உருவெடுத்துள்ளது. இப்பிரச்சினையை இழிவளவாக்குவதற்கு வீட்டு மட்டத்தில் எடுக்கவேண்டிய நடவடிக்கைகளை ஆராய்க.

(ii) மின்னில் இயங்கும் உணவுக் கலப்பான் கருவியின் (Electric Food Mixture)

(a) தொழிற்பாடு

(b) பராமரிப்பு

ஆகியவற்றை விளக்குக.

(iii) (a) கட்டிளமைப் பருவ பெண் பிள்ளைக்கான ஆடையை வடிவமைக்கும்போது உடற்பகுதியின் அடிப்படை மாதிரியுருவை வரைவதற்குத் தேவையான அளவீடுகளைப் பெயரிடுக.

(b) உடற்பகுதியின் முன்பக்க அடிப்படை மாதிரியுருவை வரைவதற்குத் தேவையான **மூன்று** அளவீடுகளைக் கணிக்குக.

(c) சேலை ரவிக்கைக்கான கையை உடற்பகுதியுடன் பொருத்தும் விதத்தினை ஒழுங்குமுறையில் எழுதுக.

## பகுதி II

(5ஆம் வினாவும் வேறு **மூன்று** வினாக்களும் உட்பட **நான்கு** வினாக்களுக்கு விடை எழுதுக.)

5. முன்பிள்ளை அபிவிருத்தி நிலையத்திற்கு செல்லும் விமலன் குடும்பத்தில் மூத்த பிள்ளை என்பதுடன் நல்ல போசாக்கு நிலையில் உள்ளவன். அவன் சமவயதினருடன் சினேகபூர்வமாகப் பழகுவதில்லை. அத்துடன் வகுப்பறையில் ஆவேசமாக நடந்து கொள்வான். விமலனுக்கு 5 மாத வயதில் ஒரு சகோதரன் இருக்கிறான். பெற்றோர்கள் வேலைக்குச் செல்வதால் பிள்ளைகளைப் பார்த்துக் கொள்வதற்காக பாட்டி இவர்களுடன் வசிக்கின்றார். தமது குடும்பத்தின் உணவு வேளைகளைத் திட்டமிடுவதிலும் அவற்றை ஆக்கபூர்வமாகத் தயாரிப்பதிலும் தாய் மிகவும் அக்கறையாக உள்ளார்.

(i) விமலனின் சிறந்த போசாக்கு நிலைமையைத் தீர்மானிக்கும் காரணிகள் யாவை?

(ii) விமலனிடம் மேற்குறிப்பிடப்பட்ட நடத்தைகள் ஏற்படுவதற்குக் காரணமான விடயங்களை ஆராய்க.

(iii) விமலனின் போசணைத் தேவைகளை நிறைவு செய்வதற்கு உணவு வேளைகளைத் திட்டமிடுவதிலும் தயாரித்தலிலும் தாய் கவனத்திற் கொண்டிருக்கக்கூடிய விடயங்களை விளக்குக.

(iv) முன்பள்ளி அபிவிருத்தி நிலையம் பௌதிக ரீதியாக எவ்வாறு ஒழுங்கமைக்கப்பட வேண்டும்?

(v) ஐந்து மாத வயதுடைய குழந்தைக்குத் தாய்பால் மாத்திரம் கொடுப்பதன் முக்கியத்துவம் பற்றிக் கருத்துரைக்க.

[பக். 3 ஐப் பார்க்க

**6.** பின்வருவனவற்றை ஆராய்க.

(i) குழந்தைகளின் மொழிவிருத்திக்காக முன்பிள்ளை அபிவிருத்தி நிலையமொன்றில் செயற்படுத்தப்படும் செயற்பாடுகள்

(ii) விளையாட்டுப் பொருட்களைத் தெரிவு செய்யும்போது பிள்ளையொன்றின் வயதினை கவனத்தில் எடுத்தல்

(iii) கட்டிளமைப் பருவப் பிள்ளையை ஒரு நற்பிரஜையாக வளர்த்தெடுப்பதில் பாடசாலையின் பங்கு

(iv) சர்வாதிகார குடும்பச் சூழலில் வளரும் பிள்ளை

**7.** (i) நுகரப்படும் உணவுகளில் அடங்கும் போசணைப்பொருள்கள் உடலில் பயன்படுத்தப்படும்போது **மூன்று** செயன்முறைகள் நடைபெறுகின்றன.

*(a)* இச்செயன்முறைகளைப் பெயரிடுக.

*(b)* அவற்றுள் **ஒரு** செயன்முறையை இனங்காண்க.

(ii) *(a)* தானியங்களினதும் பருப்பு வகைகளினதும் போசணைப் பெறுமானங்களை விபரிக்க.

*(b)* பாலில் மேற்கொள்ளும் பாய்ச்சராக்கம், கிருமியழித்தல் ஆகிய இரண்டினையும் ஒப்பிடுக.

(iii) பின்வரும் உணவுத் தயாரிப்புகளில் முட்டைகளினால் ஆற்றப்படும் தொழிற்பாடுகளை விளக்குக.

*(a)* கேக்

*(b)* கஸ்டாட்

*(c)* பான்கேக் (சுருட்டப்பம்)

**8.** (i) *(a)* வாழ்க்கை வட்டத்தில் நாளொன்றுக்கு அதிகூடிய சக்தி தேவைப்படும் **மூன்று** பருவங்களைக் குறிப்பிடுக.

*(b)* அவ் ஒவ்வொரு பருவத்திற்கும் அதிக சக்தி தேவைப்படுவதற்கான காரணங்களைத் தருக.

(ii) இரைப்பை அழற்சியும் நீரிழிவும் இலங்கையில் அதிகமாக காணப்படும் இரு தொற்றா நோய்கள் ஆகும். நபரொருவரின் உணவு நுகர்தல் கோலங்கள் இந்நோய்களில் எவ்வாறு தாக்கம் செலுத்தும் எனக் கருத்துரைக்க.

(iii) பின்வருவன நற்காப்புச் செய்யப்பட்ட சில உணவு வகைகளாகும்.

*(a)* தயிர்

*(b)* ஊறுகாய்

*(c)* உருளைக்கிழங்கு தோசி

*(d)* உலர்த்திய பலாக்காய்

மேற்குறிப்பிட்ட ஒவ்வொரு உணவையும் தயாரிக்கும் செயன்முறையின்போது பின்பற்றப்படும் படிமுறைகள் அவ்வுணவு நற்காப்பில் தாக்கம் செலுத்தும் விதத்தை விளக்குக.

**9.** (i) ஆராய்க.

*(a)* இலங்கையில் போசாக்குப் பிரச்சனைகளை ஏற்படுத்தும் சமூக பொருளாதாரக் காரணிகள்

*(b)* பிள்ளைகளின் போசாக்கு நிலைகளை மேம்படுத்த பாடசாலை மட்டத்தில் எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள்

(ii) விளக்குக.

*(a)* கர்ப்ப காலத்தில் ஆபத்துக்கேதுவாகும் காரணிகள்

*(b)* பின்பிள்ளைப் பருவத்தில் பிள்ளைகளின் உடல் விருத்தியைப் பாதிக்கும் காரணிகள்

***